மெய்கண்டார் கழக வெளியீடு—கஎ. 

உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு

கழக ஆசிரியர் சித்தாந்தசிகாமணி

. க. வச்சிரவேல் முதலியார் B.A., L.T. அவர்கள்

குறிப்புரையுடன்.

காஞ்சிபுரம்

மெய்கண்டார் கழகம்

1949.

உ

சிவமயம்

இவ்வெளியீடு

சின்னகாஞ்சிபுரம் செட்டித்தெரு வெள்ளி, பொன்,
நகை வியாபாரியும், மெய்கண்டார்கழக
உறுப்பினரும் ஆகிய உயர்சைவத்திருவாளர்,

திரு. மு. ஆடியபாதச் செட்டியாரவர்கள்

பொருளுதவியால் அச்சிடப்பெற்றது.

மெய்கண்டார் கழக வெளியீடு—கஎ



சிவமயம்

திருச்சிற்றம்பலம்




காஞ்சிப்புராண ஆசிரியர்

மாதவச்சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த

# கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகம்

---

பத்மா அச்சகம் காஞ்சிபுரம்.

விரோதி, ஆடி.

உ

சிவமயம்

# சிவஞான சுவாமிகள் தோத்திரம்

கருணைமொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற்பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்றும் உன்னிவைத்தே உரைப்பாம்.

—தொட்டிக்கலைச் சுப்பிரமணிய சுவாமிகள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு

**ஆனந்தம் ஆனந்தம் தோழி—கம்பர்**
**ஆடுந் திருவிளை யாட்டினைப் பார்க்கில்**
**ஆனந்தம் ஆனந்தம் தோழி.**

ஒன்றுவிட் டொன்றுபற் றுமல்—என்றும்
ஒன்றுவிட் டொன்றினைப் பற்றவல் லாருக்கு
ஒன்றும் இரண்டுமல் லாமல்—நின்ற
ஒன்றினை வாசகம் ஒன்றி லளிப்பார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. க

இரண்டு வினையால் விளைந்த—வகை
இரண்டையுங் காட்டிஎன் சென்னியின் [மீதே
இரண்டு சரணமும் சூட்டி—அஞ்சில்
இரண்டை இரண்டில் அடக்கவல் லாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௨

மூன்றுல கும்படைப் பாராம்—அந்த
மூன்றுல கும்முட னேதுடைப் பாராம்
மூன்று கடவுளா வாராம்—அந்த
மூன்று கடவுளர் காணவொண் ணாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௩

நாலு வருணம்வைப் பாராம்—பின்னும்
நால்வகை ஆச்சிர மங்கள்வைப் பாராம்
நாலுபா தங்கள்வைப் பாராம்—அந்த
நாலுக்கு நாலு பதமும்வைப் பாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௪

அஞ்சு மலமஞ் சவத்தை—பூதம்
அஞ்சு தன் மாத்திரை அஞ்சிந் திரியம்
அஞ்சு தொழிலஞ்சு மாற்றி—எழுத்(து)
அஞ்சும் அஞ்சாக அமைக்கவல் லாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ரு

ஆறாறு தத்துவக் கூட்டம்—உடன்
ஆறத்து வாக்களும் ஆதார மாறும்
ஆறுகுற் றங்களும் நீங்க—இரண்(டு)
ஆறின் முடிவில் நடனஞ்செய் வாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. சு

ஏழு புவனப் பரப்பும்—கடல்
ஏழுஞ் சிகரிகள் ஏழும் பெருந்தீ(வு)
ஏழும் பிறவிகள் ஏழும்—இசை
ஏழும் படைத்த இறைவ ரிவராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. எ

எட்டு வடிவமா வாராம்—அந்த
எட்டு வடிவுக்கும் எட்டரி யாராம்
எட்டுக் குணமுடை யாராம்—பத்தி
எட்டும் உடையோ ரிதயத்து ளாராம்
**ஆனந்தம் ஆனந்தம் தோழி.** ௮

ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும்—மற்றை
ஒன்பதும் முப்பதும் ஒன்பதும் ஒன்றும்
ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும்—பின்னும்
ஒன்பதும் ஆனவைக் கப்புறத் தாராம்
**ஆனந்தம் ஆனந்தம் தோழி.** ௯

பத்துத் திசையுடை யாராம்—பத்துப்
பத்துப்பத் தாந்திருப் பேருடை யாராம்
பத்துக் கரமுடை யாராம்—தவம்
பத்தினில் ஒன்றுபத் தாகச்செய் வாராம்
**ஆனந்தம் ஆனந்தம் தோழி.** ௧௦

ஞானமும் ஞேயப் பொருளும்—பற்றும்
ஞாதாவும் இல்லையென் பார்க்கரி யாராம்
ஞானமும் ஞேயப் பொருளும்—பற்றும்
ஞாதாவு மாய்ப்பகுப் பார்க்குமெட் டாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கக

மெய்யில் அணிவதும் பாம்பு—மலை
வில்லினில் நாணாய் விசிப்பதும் பாம்பு
கையிற் பிடிப்பதும் பாம்பு—அவர்
காட்டின நாடகம் காண்பதும் பாம்பு
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கஉ

நாதத் துடியி னடிப்பும்—மெல்ல
நடந்து நடந்து நடிக்கும் நடிப்பும்
வேதம் படிக்கும் படிப்பும்—நுதல்
மீது விளங்கு குறுவேர்ப் பொடிப்பும்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கங

கையிற் கபாலத் தழகும்—திருக்
காலினிற் பாதுகை சேர்ந்த அழகும்
மெய்யணி நீற்றின் அழகும்—மையல்
மீறுங் குறுநகை மூர லழகும்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கச

உடுப்பது காவி உடையாம்—மறை
ஓதிமம் தேடும் சிரமேற் சடையாம்
எடுப்பது பிச்சை அமுதாம்—மார்பில்
ஏற்பது காமாட்சி கொங்கைச் சுவடாம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கரு



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு

## குறிப்புரை.

க. 1. ஒன்றுவிட்டு ஒன்று பற்றல்—மனம் ஒரு வழிப்படாமல் கணந்தோறும் வேறு வேறு பொருள்களைப் பற்றிவிடுதல்: அங்ஙனமன்றி ஒன்றியமனம் வேண்டும் என்றபடி.

2. ஒன்று விட்டு ஒன்றினைப்பற்றலாவது- உலகப்பற்றை விடுத்து முதல்வன் பற்றினைப் பற்றி அன்புசெய்து நிற்றல்.

3-4. ஒன்றும் இரண்டும் அல்லாமல்—நின்ற ஒன்று-முதற்பொருள் உயிர்களோடு ஒன்றே வேறே

என்பதின்றி உடனாந்தன்மையில் பிரிப்பின்றி நின்ற நிலை. இது, கண் ஒரு பொருளைக்காணும்போது, கண்ணொளியும் உயிரினறிவும் தானெனை மற்றைய தெனப் பிரித்தறிய வாராது ஒட்டி நிற்பது போன்றது. இதனை அநந்நியம் என்றும் அத்துவிதம் என்றும் கூறுப.

4. 'வாசகம் ஒன்று' என்றது - சித்தாந்தமகா வாக்கியத்தை: திருவைந்தெழுத் தெனினுமாம்.

உ. இரண்டுவினை—நல்வினை தீவினை. வகை இரண்டு– இன்பத்துன்பங்கள். அஞ்சில் இரண்டை இரண்டில் அடக்கல்-'சிவாய நம' என்னும் திருவைந் தெழுத்தில் மகரத்தைச் சிகரத்திலும் நகரத்தை வகரத்திலும் அடக்கல்.

௩. நாலுபாதம்—சைவாகமங்களின் உளவாகிய சரியை கிரியாயோக ஞானபாதங்கள். நாலுபதம்— சாலோக சாமிப்பிய சாரூப்பிய சாயுச்சியங்கள்

௫. மலம், அவத்தை, தூலபூதம், சூக்குமபூதம், பொறி, ஆற்றுந் தொழில், திருநாம எழுத்து என்பவற்றை ஐந்தைந்தாக அமைத்துள்ளமையை எடுத்தோதியபடி.

௬. இரண்டாறின் முடிவு—முடியின்மேல் பன்னிரண்டங்குலம் அருவமாயுள்ள சுழுமுனையின் முடிவெனப்படும் துவாதசாந்தம்: இது 'மீதானம்' எனவும்படும்.

௭. பெருந்தீவு ஏழு:—நாவலந்தீவு, சாகத்தீவு குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சான்மலித்தீவு, கோமேதகத்தீவு, புட்கரத்தீவு என்பன.

உலகம் ஏழு:—பூலோகம், புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பன.

௮. எட்டுவடிவம்:—மண், புனல், தீ, காற்று வெளி, ஞாயிறு, நிலவு, உயிர் என்பன. இவை இறைவனுக்கு வடிவங்களாம்.

எட்டுக்குணம்:—முற்றுணர்வு, வரம்பிலின்பமுடைமை, இயற்கையுணர்வுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், தன்வயமுடைமை, பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை தூயவுடம்பினனாதல் என்பன.

எண்வகைப்பத்தி:—அடியார் பத்தி, சிவபூசை கண்டு மகிழ்தல், சிவார்ச்சனை, சிவார்ப்பணம் செய்தல், சிவபுராணம் கேட்டல், பரவசமாதல், சிவனடி மறவாமை, பொய்வேடமின்மை.

௯. தத்துவங்கள் முப்பத்தாறும் தாத்துவிகங்கள் அறுபதுமாகிய தொண்ணூற்றாறனையுங்

கடந்த நிலையினன் முதல்வன் என்றபடி. $19+49+19+9=96$ எனக் கணக்கிட்டுக் கண்டுகொள்க.

௧0. பத்துப்பத்துப் பத்தாந்திருப்பேர்-ஆயிரந் திருப்பெயர். $10\times10\times10=1000$. தவம் பத்தினி லொன்று பத்தாகச்செய்வார் என்றபடி: எனவே "ஏகம் பத்தார்" என்னும் பேயர்க்கு நயம் பெறப் பொருள் விரித்தபடி.

௧௧. பரமுத்தி நிலையாகிய சிவபோக அநுபவ நிலையில் உயிரும், உயிரினறிவு நிகழ்ச்சியும், முதற் பொருளும் உள்ளனவெனினும், யான் துய்க்கின் றேன் என்னும் சுட்டறிவு நிகழப் பெருமையின் காண்பானும் காட்சியும் காட்சிப்பொருளில் வியாப் பியமாய் அடங்கி நிற்கும் என்பது உணர்த்து கின்றது. இது

'காண்பானும்காட்டுவதும்காண்பதுவும்நீத்துண்மை காண்பார்கள் நன்முத்தி காணுர்கள்—காண்பானும்

காட்டுவதுங்காண்பதுவும் தண்கடந்தைச்சம்பந்தன் வாட்டும்நெறி வாரா தவர்'' என்னும் வினவெண் பாவின் பொருளை விளக்குதல் காண்க.

கஉ 'அவர்காட்டின நாடகம் காண்பதும்பாம்பு' என்றது-பதஞ்சலி முனிவரை.

கங. முதல்வன் உயிர்களுக்குப் போகமும் யோகமும் உதவுதற்பொருட்டுப் போகவடிவும் யோக வடிவுமாய்த் தம்முள் மாறுபட்ட வடிவங்களைத் தான் ஒருவனே கோடலின், அங்ஙிலை உலகத்தின் வைத்து அறியப்படாத அதிசய நிலையாகலின், அவன் அசிந் திதன் எனவும், அவன் உரு, உலகினை இறந்துநின்ற தெனவும் உணர்க என உணர்த்தியருளியபடி.

திருச்சிற்றம்பலம்.

**கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு முற்றிற்று.**

சிவஞான மாதவன் சேவடி வாழ்க.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி நாயனார் துணைமலர் வெல்க.

## திருப்புன்கூர்-தேவாரம் பண்-தக்கேசி

வையக முற்றும் மாமழை மறந்து
    வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை என்ன
    ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
    பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்
    செழும் பொழிற் றிருப்புன் கூருளானே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மெய்கண்ட நாதன் விரைகழல் வெல்க

# மெய்கண்டார் கழகவெளியீடுகள்

1. திருமுறை சாத்திரங்கள்
2. தலைமை உரையின் மேல்குறிப்பு
3. திருஞானசம்பந்தர் திருநாட் சிறப்பு
4. காஞ்சிப்புராணம்
5. திருத்தொண்டர் திருநட்சத்திரம்
6. ஆண்டுவிழாத் தலைமைப்பேருரை
7. மெய்கண்டார் திருவுருவப்படம்
8. திருக்குரங்கணின் முட்டத் தேவாரம்
9. திருவோத்தூர்த் தேவாரம்
10. திருமாகறல் தேவாரம்
11. திருப்பள்ளியெழுச்சி திருவெம்பாவை
12. சைவசந்தானசாரியர் புராணம்
13. திருப்பனங்காட்டூர்த் தேவாரம்
14. பாராயணத் திருமுறைத்திரட்டு
15. திருநெறிக்காரைக்காட்டுத் தேவாரம்
16. சிவஞானபோதம்,
17. கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு